தமிழ்நாடு அரசு



வேளாண்மைத்துறை

# தர்மபுரி மாவட்டத்திற்குரிய மரங்கள்



வெளியீடு : வேளாண்மை இணை இயக்குநர், தர்மபுரி.

தமிழ்நாடு அரசு  வேளாண்மைத்துறை

# தர்மபுரி மாவட்டத்திற்குரிய மரங்கள்



வெளியீடு : வேளாண்மை இணை இயக்குநர், தர்மபுரி.

# அணிந்துரை

மரமின்றி மழை இல்லை, மழையின்றி பயிரில்லை, பயிரில்லையேல் உணவில்லை என்பதன் மூலம் மரங்களின் முக்கியத்துவம் நமக்கு நன்கு விளங்குகின்றது.

விவசாயத்துடன் குறிப்பிட்ட சில மரவகைகளைத் தேர்வு செய்து பயிரிடுவதன் மூலம் மண் வளம் பாதுகாக்கவும், சுற்றுப்புற சூழல் மாசுபடாமல் இருக்கவும், கூடுதல் வருமானம் பெறவும் இயலும்.

நமது மாவட்டத்தில் " சிடா " (சுவீடன் சர்வதேச மேம்பாட்டு முகமை) நிதி உதவியுடன் மானாவாரி நிலங்களில் வேளாண் காடுகள் அமைக்கும் திட்டம் 1988 -ம் ஆண்டு முதல் செயல்பட்டு வருகின்றது.

பலவகைப்பட்ட பலன் தரும் மரங்களின் மரக்கன்றுகளை சிறு / குறு விவசாயிகளின் நிலத்தில் " உழவர் நாற்றங்கால் " அமைத்து மரக்கன்றுகள் உற்பத்தி செய்து சிறு / குறு விவசாயிகளுக்கு இலவசமாக வழங்கி வேளாண் காடுகள் அமைக்கப்பட்டு வருகின்றன.

மரம் வளர்ப்பில் ஊக்கமளிக்க, இத்திட்டத்தின் மூலம் மரக்கன்றுகள் நடவு செய்யும் விவசாயிகளுக்கு, மரக்கன்று நடவின்போது கன்று ஒன்றுக்கு ரூ. 0.50 வீதமும், கன்று நடவு செய்து 6 மாதங்களுக்குப் பின் உயிருடன் உள்ள கன்று ஒன்றுக்கு ரூ. 1.00 வீதமும், கன்று நடவு செய்து 2 வருடங்களுக்கு பின் உயிருடன் உள்ள கன்றுக்கு ரூ. 1.00 வீதமும் ஊக்கத் தொகை வழங்கப்பட்டு வருகிறது.

தர்மபுரி மாவட்டத்தில் மட்டும் 1,67,700 எக்டர் நிலப்பரப்பு மரக்கன்றுகள் நடவு செய்ய ஏற்றவையாக உள்ளது.

நமது மாவட்டத்தில் பயிரிட ஏற்ற, உபயோகமுள்ள மரவகைகள் மற்றும் பழ மரவகைகள் பற்றிய தொகுப்பு இம்மாவட்ட விவசாய பெருமக்களின் நலன் கருதி தொகுத்தளிக்கப்பட்டுள்ளது. தர்மபுரி மாவட்ட வேளாண் பெருமக்கள் இக்குறிப்பினை நன்கறிந்து தங்களுக்கு ஏற்ற மர வகைகளை வளர்த்து, வளம் சேர்த்து, கூடுதல் வருவாய் பெற்று, நல்வாழ்வு வாழ இவ்வெளியீடு உதவும் என நம்புகிறேன்.

எனது வாழ்த்துக்களை உரித்தாக்குகிறேன்.

சர்தார்மொகிதீன், பி.எஸ்.சி. (விவ)

வேளாண்மை இணை இயக்குநர் (பொறுப்பு)

தர்மபுரி.

## தருமபுரி மாவட்டத்திற்குரிய மரங்கள்

### அறிமுகம்

தருமபுரி மாவட்டம் தன் பரப்பில் 31% பாகத்தை வனப் பகுதியாகக் கொண்டது இதன் சிறப்பு அம்சமாகும். 1965 ஆம் ஆண்டு அக்டோபர் 2 - ஆம் நாள் அன்று இம்மாவட்டம் சேலம் மாவட்டத்திலிருந்து தனியாக பிரிக்கப்பட்டது. இது இன்னமும் வளர்ச்சி குன்றியிருப்பதற்கு காரணம் பெரிய நீர்ப்ப . னத் திட்டங்கள் இல்லாமை, மெத்தனத் தொழில் வளர்ச்சி மற்றும் கனிப்பொருட்கள் தோண்டி எடுக்கப்படாமை ஆகியவைகளாகும். புளி, சில்வர் ஒக், சீதாப்பழம் முதலிய பலவகை மரங்கள் இங்கு விரும்பி வளர்க்கப்படுகின்றன. இம்மரங்களைப் பற்றிய தகவல்கள் இச்சிறு புத்தகத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.

### ஆதாரப் புள்ளி விபரங்கள்

இம்மாவட்டத்தில் பத்து வட்டங்கள் உள்ளன. அவையாவன: தர்மபுரி, பாலக்கோடு, பென்னாகரம், பாப்பிரெட்டிப்பட்டி, அரூர், ஊத்தங்கரை, போச்சம்பள்ளி, கிருஷ்ணகிரி, ஒசூர், மற்றும் தேன்கனிக்கோட்டை. காவிரி ஆறும், தென் பெண்ணை ஆறும் இதன் பெரிய நதிகளாகும், இம்மாவட்டத்தில் நெல், சோளம், கம்பு, கேழ்வரகு, சாமை, பயறு வகைகள், நிலக்கடலை, சூரியகாந்தி, பருத்தி. கரும்பு போன்ற பயிர்கள் பயிரிடப்படுகின்றன. இம்மாவட்டம் வேளாண் தட்பவெப்ப மண்டலங்களுள் ஒன்றான வடமேற்கு மண்டலம் எனும் பகுதியில் அடங்கும்.

நில உயர பாகுபாடுகளைப் பொறுத்து தர்மபுரி மாவட்டத்தின் தட்பவெப்ப அளவு $21^{o}$ முதல் $38^{o}$ சென்டி கிரேடு வரை வேறுபடுகிறது. பொதுவாக இங்கு டிசம்பர் முதல் பிப்ரவரி வரை குளிராகவும், மார்ச் முதல் மே வரை அதிக வெப்பமாகவும் இருக்கும். ஒசூர் வட்டத்தில் ஆண்டு முழுவதும் இதமான தட்ப வெப்ப நிலையும், மிதமான வெப்ப அளவும் காணப்படும். இங்கு சராசரி ஆண்டு மழையளவு 850 மி.மீ. ஆகும். தென்மேற்குப் பருவமழை (ஜூன் முதல் செப்டம்பர் வரை) யாலும், வட கிழக்குப் பருவமழையாலும் (அக்டோபர் முதல் டிசம்பர் வரை) 80 சத மழை கிடைக்கிறது.

முதல் மாதத்தில், பூவாளியால் காலையும், மாலையும் தண்ணீர் ஊற்ற வேண்டும். இரண்டாவது மூன்றாவது மாதங்களில் ஒரு நாளைக்கு ஒரு தடவை மட்டும் நீர் ஊற்றினால் போதுமானது. நான்காவது ஐந்தாவது மாதங்களில் ஒரு நாள் விட்டு ஒரு நாள் நீர் ஊற்ற வேண்டும். பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை பாலிதீன் பை செடிகளை இட மாற்றி வைத்து, வேர் பூமியில் இறங்காமல் பார்த்துக்கொள்ள வேண்டும். மாற்றி வைக்கும்போது, பாலிதீன் பை செடிகளை உயரத்திற்கு ஏற்றவாறு வரிசையாக பாத்தி வடிவில் அடுக்க வேண்டும். நீர் ஊற்றும்போது களை எடுத்தல் அவசியம்.

செடி பாதுகாப்பு முறைகளை அனுசரிக்க வேண்டும். 10% B.H.C. தூளை செடியின் மேல் தூவலாம். பூச்சி கொல்லிகளான 'அல்டிரின்' 'பாஸ்போமிடான்'. பூசான கொள்ளியான கார்பன்டேசியம் முதலியவைகளையும் தெளிக்கலாம்.

ஐந்து மாதங்கள் வயதான சுமார் 30 செ.மீ. உயரம் வளர்ந்த நாற்றுகள் வெளி நடவுக்கு ஏற்றவை.

## 1. கருவேல் (Acacia nilotica) :

விதை எடை கிலோவுக்கு 7,000 விதைகள் ஆகும். முளைத்தல் விதைத்த 6 வது நாளிலிருந்து 25 வது நாள்வரை நடைபெறுகிறது. முளைப்பு விகிதம் - 30%. மறு துளிர் வருவதாலும், பல்நோக்கு பலன்கள் கொடுப்பதாலும் நல்ல கருவேல் விதைகளையே உபயோகித்தல் வேண்டும். நீர்க்கருவேல் விதைகளைத் தவிர்க்க வேண்டும். இச்செடி களிமண்ணிலும் மற்றும் ஏரி போன்ற தண்ணீர் தேங்கும் இடங்களிலும் நடச் சிறந்ததாகும். ஆட்டுப்புழுக்கைகளிலிருந்து சேகரிக்கப்பட்ட விதைகள் விரைவாக முளைப்பதுடன் வளமான செடிகளையும் தருகின்றன. மாறாக, நன்கு வளர்ந்த மரங்களிலிருந்து சேகரிக்கப்பட்ட விதைகளை, விதைக்கும் முன்பு சுடு நீரில் ஊற வைத்தல் அவசியம்.

வேளாண் காட்டுத் தோட்டங்களில், விவசாய நிலங்களில் 4 மீட்டர் இடைவெளி வரிசைகளில், வரிசையில் 2 மீட்டர் தூரத்தில் செடிகள் நடப்படுகின்றன. முதலாண்டில் செடிக்கு ரூ. 3/- வீதம் ஒரு எக்டருக்கு ரூ.3,750/- நடவு மற்றும் பராமரிப்பு செலவு ஆகும். இத்தொகை 15% கூட்டுவட்டி விகிதத்தில் 10 ஆண்டுகளில் ரூ. 15,000 ஆகப் பெருகும். 10 -வது ஆண்டு அறுவடையில் எதிர்ப்பார்க்கப்படும் வருமானம் பின்வருமாறு :

மரத்தடியில் ஒரு கன அடி மரத்தின் விலை ரூ. 200 வீதம் 50 கனஅடி மரத்தின் விற்பனை வருமானம் ரூ. 10,000

ஒரு டன் விறகு ரூ. 300/- வீதம் 15 டன் விறகின் விற்பனை வருமானம் ரூ. 4,500

ஒரு கிலோ கோந்தின் விலை ரூ. 10/- வீதம் 240 கிலோ கோந்து விற்பனை மூலம் வருமானம் ரூ. 2,400

மொத்தம் ரூ. 16,900

இவ்வாறாக, நிகர இலாபம் ரூ. 1,900/- (ரூ. 16, 900 - 15,000), 10 -வது ஆண்டின் அறுவடையின்போது ஒரு எக்டரிலிருந்து கிடைக்கும்.

## 2. வேப்பமரம் (Azadirachta indica)

பழங்கள் ஜூன் முதல் ஆகஸ்ட் வரை முதிர்ச்சி அடைகின்றன. விதை எடை கிலோவுக்கு 3,300 விதைகள். முளைப்பு விகிதம் 90%. புதிய விதைகள், பழங்களின் கூழை நீக்கி ஆகஸ்ட் மாதம் சேகரிக்கப்பட்டு தண்ணீரில் கழுவப்படுகின்றன.

வேப்பம் புண்ணாக்கு ஒரு நல்ல பூச்சிகொல்லி ஆகும். அதன் பட்டையும் வேரும் பல மருத்துவப் பயன்களைக்கொண்டுள்ளன. அதன் இலைகள் தலை உரமாக உபயோகமாகின்றன. வேளாண் காடு பயிராக வளர்ப்பதற்கு இம்மரச் செடிகள் 5 மீ. இடைவெளியுள்ள வரிசைகளில், வரிசையில் 5 மீ. தூரம் இடைவெளிகளில் நடப்படுகின்றன. அதாவது ஒரு எக்டருக்கு 400 செடிகள் நடப்படுகின்றன. முதலாண்டில், தோட்டம் உண்டாக்கும் செலவாக, செடிக்கு ரூ. 3/ ஆகிறது. அதாவது ஒரு எக்டருக்கு ரூ. 1,200/ செலவாகிறது. 15% கூட்டு வட்டியில் இத்தொகை 30 ஆண்டுகளில் ரூ. 76,800 ஆக உயர்கிறது.

30 -வது ஆண்டில், ஒரு எக்டரிலிருந்து எதிர்பார்க்கும் வருமானம் பின்வருமாறு :

மரத்தடியில் ஒரு கன அடி மரம் விலை ரூ. 200/ வீதம் 600 கன அடி மரத்தின் விற்பனை வருமானம் ரூ. 1,20,000

மரத்தடியில் ஒரு டன் விறகின் விலை ரூ. 300/ வீதம் 4 டன் விறகின் விற்பனை வருமானம் ரூ. 1,200

மரத்தடியில் ஒரு டன் விறகின் விலை ரூ.1000 வீதம் 10 டன் விதைகளின் விற்பனை வருமானம் ரூ. 10,000

மொத்தம் ரூ. 1,31,200

ஆக, நிகர இலாபம் ரூ. 54,400 (ரூ. 1,31,200 - 76,800) ஆகும்.

## 3. புங்க மரம் (Derris indica)

விதைகள் மார்ச் முதல் மே மாதம் வரை முதிர்ச்சியடைகின்றன. விதை எடை கிலோவுக்கு 800 - 1,500 ஆகும். முளைக்கும் விகிதம் 80 இதன் விதைகள் (உட்கொள்ளப்படாத) எண்ணெய்ப்பசையுள்ளவை யாகையாலும் சேமிப்பு காலத்தில் முளைப்புத்திறன் இழக்கப்படுமாதலாலும் சேகரித்தவுடன் விதைக்கப்பட வேண்டு நல்ல முளைப்பு பெற, விதைகளை முற்றிய காய்களிலிருந்து விதைக்கு முன்பு தான் அகற்ற வேண்டும்.

வேளாண்காடு வளர்ப்புத் திட்டத்தில், இதன் செடிகள் 5 மீ. தூர இடைவெளியிலும், வரிசையில் 5 மீ. தூர இடைவெளியிலும் நடப்படுகின்றன. முதலாண்டில் தோட்டம் உண்டாக்கும் செலவு செடிக்கு ரூ. 3/- ஆகுமாதலால், ஒரு எக்டருக்கு ரூ. 1,20 - செலவிட வேண்டிவரும். 15% கூட்டு வட்டி விகிதத்தில், இத்தொகை 30 வது ஆண்டில் ரூ. 76,800 ஆகப் பெருகும்.

30 - வது ஆண்டு அறுவடையின் போது ஒரு எக்டரிலிருந்து எதிர்ப்பார்க்கப்படும் வருமானம் பின்வருமாறு :

| | | |
|---|---|---|
| மரத்தடியில் ஒரு கன அடி மரத்திற்கு ரூ.200/- வீதம் 600 கன அடி மரத்தின் வருமானம் | ரூ. | 1,20,000 |
| ஒரு டன் விறகின் விலை ரூ. 300/- வீதம் 4 டன் விறகின் வருமானம் | ரூ. | 1,200 |
| ஒரு டன் விதையின் விலை ரூ. 1,000/- வீதம் 5 டன் விதைகளின் வருமானம். | ரூ. | 5,000 |
| மொத்தம் | ரூ. | 1,26,200 |

ஆக எக்டருக்கு நிகர இலாபம் ரூ. 49,40 (ரூ. 1,26,200 - 76, 800) ஆகும்.

## 4. இலுப்பை (Madhuca latifolia)

இது அதிவெப்ப மண்டலத்தில் காணப்படும் மரமாகும். மத்திய பிரதேசத்தில் இது பிரபலமாக வளர்க்கப்படுகிறது. தமிழ் நாட்டின் கிராமங்களில் காணப்பட்ட இலுப்பைத் தோப்புகள் பல ஆண்டுகளில் வெட்டப்பட்டு விட்டன. இதன் களர் நிலத்தில் வளரும் தன்மையாலும் கட்டுமான மரம் மற்றும் விறகு கொடுக்கும் தன்மையாலும், சமையலுக்கு பூக்கள் உபயோகமாவதாலும் மேலும் இம்மரவிதையின் எண்ணெ

சோப்பு மற்றும் கிளிசரின் தயாரிக்கவும் சமையல் எண்ணெய் எடுப்பதற்கும் உதவுவதாலும் கிராமங்களில் இது விரும்பி வளர்க்கப்படும் மரமாகிறது.

ஜூன் முதல் ஆகஸ்ட் வரை இதன் பழங்கள் முதிர்கின்றன. இதன் விதை எடை - கிலோவுக்கு 450. பூஞ்சானம் மற்றும் பூச்சித் தொந்தரவிலிருந்து தடுக்கப்பட்டு சேமித்து வைத்தால், இதன் விதைகள் ஓர் ஆண்டு வரை முளைக்கும் சக்தி பெற்றிருக்கும். எண்ணெய்ப்பசை இருப்பதால் இவ்விதையின் முளைக்கும் சக்தி சீக்கிரமே கெட்டு விடுகிறது. ஆதலால் பறித்தவுடன், விதைகளை எடுத்து விதைப்பது நல்லது. விதைப்பதற்கு முன்பு, விதை நேர்த்தி ஏதும் தேவையில்லை. முளைப்பு விகிதம் 35%. செடி வரும் விகிதம் 30%. விதைத்த சுமார் 10 நாட்களில் முளை விட ஆரம்பித்து மேலும் 10 நாட்கள் வரை முளைகள் வந்து கொண்டிருக்கும்.

13 செ.மீ x 25 செ.மீ x 250 'காஜ்' பாலிபைகளில் வளமுள்ள மண்ணை நிரப்பி விதைகள் விதைக்கப்படுகின்றன. விதைகளை நேரடியகாவும் நிலத்தில் ஊன்றலாம். பாலிபை செடிகளுக்குக் குறைவாகவே நீர் ஊற்ற வேண்டும். தோட்டமாக வளர்க்க, 8மீ x 8 மீ இடைவெளியில் நடவு செய்ய வேண்டும். விதைக்கப்பட்ட விதைகளுக்கு மேல் 5 செ.மீ கன மண் நிரப்ப வேண்டும். மழையில்லாத நாட்களில் நீர் ஊற்றுவது அவசியம். வேளாண் காட்டுப் பயிராகவும் இதை 8 மீ x 8 மீ. இடைவெளிகளில் வளர்க்கலாம். மழைகாலத்திற்கு முன்பும் பின்பும் செடிகளைச் சுற்றி மண்ணைக் கொத்திர கொடுக்க வேண்டும். முதல் ஓரிரு ஆண்டுகளுக்கு வரட்டு உறைபனி, கால்நடைகள் இடைகளிலிருந்து காத்தல் வேண்டும்.

30 ஆண்டுகளில் அறுவடை செய்யலாம். செடிக்கு ரூ.3 அல்லது எக்டருக்கு ரூ. 450 செலவு ஆகும். 30 ஆண்டுகளில் 15% கூட்டு வட்டி விகிதத்தில் ரூ. 29,300 ஆக உயரும். 30 -வது ஆண்டு அறுவடையில் எக்டருக்கு 150 கன அடி மரம் மரத்தடி விலையில் ரூ. 30,000 பெறுமானமும், 2 டன் விறகு ரூ. 600 பெறுமானமும், 5 டன் விதைகள் ரூ. 5,000 பெறுமானமும் கிடைக்கும். ஆதலால் மொத்த வருமானமாக ரூ. 35,600 எதிர்ப்பார்க்கலாம். எனவே, கிடைக்கக்கூடும் இலாபம் எக்டருக்கு ரூ. 6300 (ரூ. 35,600 - 29,300).

## வாகை (Albizia lebbek)

ஈர இலையுதிர் மற்றும் வெப்ப இலையுதிர் காடுகளில் காணப்படும் இம்மரம் $8^0$N (வடஅட்சாம்சம்) முதல் $27^0$N வரையில், கடல் மட்டத்திலிருந்து 1200 மீட்டர் உயர இடங்கள் வரை இயற்கையில் வளர்கிறது. ஆண்டு மழையளவுத் தேவை - 635 மி. மீ முதல் 2500 மி. மீ வரை. வறட்சியையும் வேறுபட்ட மண்வகைகளையும் பொறுத்துபோகவல்லது.

விதைத் தோடுகள் ஜனவரி முதல் மார்ச் வரை முதிர்கின்றன. ஜனவரியில் விதைத் தோடுகள் சேகரம் மரத்திலேறி குச்சியினால் அடித்தோ, மரத்தடியில் துணியை விரித்து கீழ்விழும் தோடுகளைப் பொறுக்கியோ செய்யப்படுகிறது. உலத்தப்பட்ட விதைத் தோடுகளைக் கம்பால் அடித்து முறம் கொண்டு தூற்றி விதைகள் பிரிக்கப்படுகின்றன. விதை எடை கிலோவிற்கு 8, 000 முதல் 13, 000. புதிய விதைகளின் முளைப்புத் திறன் - 94% சேமித்து வைத்தால் முளைதிறன் 25% வரை குறைந்து போகலாம். முளைப்பு விதைத்த ஆறாம் நாளிலிருந்து 25 ஆம் நாள் வரை நடைபெறுகிறது. முளைக்கும் சக்தி இரண்டாண்டுகள் வரை இருக்கும். விதைகளை கொதித்த நீரில் போட்டு 24 மணி நேரம் ஊற வைத்து விதைநேர்த்தி செய்ய வேண்டும். மரத்தின் வேரைச் சேதப்படுத்தினால் மறுமுளைப்பு உண்டாகிறது. இம்மரம் காற்றில் சேதமடையக் கூடும். பத்து ஆண்டுகளில், மார்புயரச் சுற்றளவு 75 செ.மீ வரை இம்மரம் வளரும்.

## விதைப் பாத்தி பராமரிப்பு

மார்ச் - ஏப்ரலில் விதைகள் நட்டு விதைக்கப்படுகின்றன. நாற்றுப்பண்ணையில் நல்ல வளர்ச்சிக்கு, பாத்திகளில் களை சிறிதும் இல்லாமல் பராமரிக்கப்படவேண்டும். மண்ணைக் கிளறிவிட்டும் விதைப் பாத்தியை ஈரமாக வைத்தும் வர வேண்டும். முழு உச்சி வெய்யிலும் இதற்குத் தேவை.

தமிழ்நாட்டில் மணற்பாங்கான வண்டலும் மாட்டுத் தொழுவ உரமும் 4:1 என்ற விகிதத்தில் கலக்கப்பட்டு, விதைகள் நடவிருக்கும் பாலிபைகளில் மாற்றி நடுவதும் வழக்கத்தில் இருக்கிறது.

## வெளிநடவு

நிலத்தை உழுது தயார் செய்து குப்பைகளை ஜனவரி முதல் ஜூன் வரை எரித்து விடவேண்டும். 2.5 மீ x 2. 5 மீ இடைவெளியில் நடும் இடங்களை குச்சிகள் நட்டுக் குறித்தல் வேண்டும். இக்குறிகளில் 30

செ. மீ கனக்குழிகளைத் தோண்ட வேண்டும். வடகிழக்குப் பருவ மழை ஆரம்பத்தில், அக்டோபர்-நவம்பர் மாதம், பாலிபைகளிலிருந்து நாற்றுச் செடிகள் நீக்கப்பட்டு வெளிநடவு செய்யப்பட வேண்டும்.

வேளாண்காடு பயிர் செய்யும் இடங்களில் 5மீ x 5மீ இடைவெளி அனுசரிக்கப்படுகிறது. (ஒரு எக்டருக்கு 400 செடிகள்) தோட்டம் அமைக்கும் செலவு ஒரு எக்டருக்கு ரூ. 1, 184/- ஆகும். இத்தொகை 15% கூட்டுவட்டியில் 30 ஆண்டுளில் 75, 776 ஆகப் பெருகும். 30 ஆம் ஆண்டில் அறுவடை செய்யும் போது 600 கன அடி மரம், மரத்தடியில் 1, 20, 000 க்கும் 4 டன் விறகு ரூ. 1. 200 ம் விலை போகும். விவசாய வருவாயாக ரூ. 2400 கிடைக்கக் கூடும். இவ்வாறு எக்டருக்கு 75,776 செலவு மதிப்பீட்டில் வருவாயாக ரூ. 1, 23, 600 (1, 20, 000ம் ரூ. 1, 200ம், ரூ. 2, 400ம்) கிடைக்கும். அதா 30 ஆண்டுகளில் இலாபமாக ரூ. 47, 824 (ரூ. 1, 23, 600 - ரூ. 75, 776) ஒரு எக்டருக்குக் கிடைக்கும்.

### சில்வர் ஓக் (Grevillea robusta)

ஆஸ்திரேலியாவின் மழைக்காடுகளில் இயற்கையாகக் காணப்படும் 'சில்வர் ஒக்', நீலா மலைகளில் தேயிலைத் தோட்ட நிழல் மரமாகவும், மற்றும் உயந்த நில மட்ட இடங்களிலும் வளர்க்கப்பட்டு தமிழ்நாட்டில் இயற்கைப் படுத்தப்பட்டு விட்டது. மேலும், தகுந்த இடங்களில்இது சாலையோர அலங்கார மரமாகவும் வளர்க்கப்படுகிறது. குளிர்ந்த பிரதேசங்களில் மேடை நாற்காலி முதலியன செய்யவும், விறகிற்காகவும், கோந்து மற்றும் பிசின் எடுப்பதற்காவும், வேளாண்காடாகவும் இது வளர்க்கப்படுகிறது.

இதன் பழங்கள் ஜூன் மாதம் தோன்றி குளிர் மாதங்களில் முதிர்ச்சியடைகின்றன. பழங்கள் வெடித்துத்திறக்கும் முன்பு, அவைகள் சேகரிக்கப்பட்டு வெய்யிலில் உலர்த்தப்படுகின்றன. விதை எடை - கிலோவுக்கு 95,000 விதைகள். முளைப்புத்திறன் 10 மாதங்கள் வரை நீடித்திருக்கும் விதைகள், விதைத்த 10 ஆம் நாளிலிருந்து 35 வது நாள் வரை முளைக்கின்றன. முளைப்புவிகிதம் 20% செடியாகிக் கிடைக்கும் விகிதம் 10% விதைக்கும் முன்பு விதை நேர்த்தி ஏதும் செய்யத் தேவையில்லை.

நிலமட்ட உயரம் 1200 - 1800மீ. வரை இது வளர்கிறது. நாற்றுப்பண்ணையில், நிலம் 45 செ.மீ. ஆழம் கொத்தப்பட்டு, அதன் மேல் சுள்ளிகள் எரிக்கப்படுகின்றன. கிடைக்கும் சாம்பல் செம்மண்ணுடன் கலக்கப்பட்டு, ஒரு பாத்திக்கு 3-4 கூடைகள்

புகையேற்றப்பட்டு மாட்டுத்தொழுவ உரம் மேலும் கலக்கப்படுகிறது. விதைகள் 8-10 செ.மீ. இடைவெளிகளில் பாத்திகளில் ஊன்றப்படுகின்றன. முளைத்தலை துரிதப்படுத்த பாத்தியின் மேல் வைக்கோல் பரப்பப்படுகிறது. ஆரம்ப காலத்தில், பூவாளியால் தினம் இரண்டு வேளைகள் நீர் ஊற்றுதல் வேண்டும். வெப்பம் மிகுதியானால், பாத்திக்கு மேல் சிறிது உயரமாகப் பந்தல் அமைக்கவேண்டும். 8-10 செ.மீ. உயரமுள்ள நாற்றுகள் மாற்றுப் பாத்திகளிலோ, வளமுள்ள மண்கலவையுள்ள பாலிபைகளிலோ, பெயர்த்து நடப்படுகின்றன. 6-7 மாதங்களில் நாற்றுச் செடிகள் 30-45 செ.மீ. உயரமாகும் போது 3.5 மீ x 3.5 மீ. இடைவெளியில் வெளி நடவு செய்யப்படுகின்றன.

வேளாண்காடுகளில் தோட்டமாக அமைத்தால் 5மீ x 5மீ. இடைவெளி யின்பற்றப்பட்டு, செடிக்கு ரூ. 3 வீதம் ஒரு எக்டருக்கு ரூ.1200 செலவாகும். 15% கூட்டு வட்டியில் இத்தொகை 30 ஆண்டுகளில் ரூ. 76,800 ஆகப் பெருகும். 30 ஆண்டு முடிவில் அறுவடை செய்தால் ஒரு எக்டேரிலிருந்து கிடைக்கக்கூடும் வருமானம் 600 கன அடி மரத்தடியே விற்றால் ரூ. 1,20,000, 4 டன் விறகு ரூ. 1,200ம் ஆகும். ஆதலால் நிகர இலாபம் ஒரு எக்டேருக்கு ரூ. 44,400 (ரூ.1,21,200 - 76, 800).

## 8. ஆச்சா (Hardwickia binata)

அதிவெப்ப மண்டலத்தில் காணப்படும் இம்மரம் வரண்ட ஆழமற்ற மண்ணிலும் கற்களடந்த நிலங்களிலும், பூமிகளிலும் வளர்கிறது. ஆனால் இது வறட்சியையும் உறைபனியையும் தாங்க வல்லது.

ஆண்டுதோறும் விதைகள் அங்கும் இங்குமாக கிடைக்கின்றன. ஆனால் 3-5 ஆண்டுகளுக்கு ஒருமுறை மரக் கூட்டங்களில் விதைகள் ஏராளமாகக் கிடைக்கின்றன. புது விதைகள் சீக்கிரமாகவும், அதிகப்படியாகவும் முளைக்கின்றன.

ஏப்ரல் - மே மாதங்களில் பழங்கள் உண்டாகின்றன. விதை எடை கிலோவுக்கு சுமார் 3,930 ஆகும். விதைத்த 6 ஆம் நாள் முதல் 20 ஆம் நாள் வரை முளைக்கும் காலம் ஆகும். முளைவிடும் விகிதம் -50% செடிகள் ஆகுபவை -25% முளைக்கும் சக்தி ஒராண்டு காலம் வரை இருக்கும். விதைக்கும் முன் விதைநேர்த்தி செய்யத்தேவையில்லை. இதை நேரடியாக விதைத்தோ பை/தொட்டிச் செடிகளை நட்டோ பயிர் செய்யலாம்.

பறவைகள் உட்கொள்வதற்கு முன் இதன் பழங்களைப் பறித்தல் வேண்டும். பிரித்தெடுக்கப்பட்ட விதைகளை நிலத்தில் நேரடியாகவே விதைக்கலாம்.

மானாவாரி நிலங்களில் விதைகளை வரிசைகளில் விதைத்து, வரிசைகளின் நடுவில் விவசாயப் பயிர்களைப் பயிர் செய்யலாம். இளஞ்செடிகளுக்குப் பகுதி நிழல் கொடுத்து வெய்யிலிலிருந்து காத்தல் வேண்டும். சில இடங்களில், முதலில் நிலத்தைக் கொத்தி அல்லது உழுதபின், விதைகளைத் தூவி விதைக்கிறார்கள்.

மாட்டு வண்டிச் சக்கரங்கள், மரக்கம்பங்கள், விவசாயக்கருவிகள், முதலியவை இம்மரத்தினால் செய்யப்படுகின்றன. இது ஒரு நல்ல கட்டுமான மரமும் கூட, கயிறு திரிக்க நாரும், சாம்பிராணி வகைகளும் இம்மரத்திலிருந்து கிடைக்கின்றன. இதன் தழைகள் மாட்டுத் தீவனமாகின்றன.

வேளாண்காடு உண்டாக்குவதனால் 5 மீ. x 5மீ. இடைவெளி நடுவதற்கு அனுசரிக்கப்பட்டு 30 வது ஆண்டு அறுவடை செய்யப்படுகிறது. தோட்டம் அமைக்கும் செலவு எக்டேருக்கு ரூ.1200, 30 ஆண்டுகளில் ரூ. 76,800 ஆகப்பெருகும். 30வது ஆண்டு அறுவடையில் 600 கன அடி மரம்(மதிப்பு ரூ. 1,20,000) மற்றும் 4 டன் விறகு (மதிப்பு ரூ. 1,200) மரத்தடியில் எக்டேருக்குக் கிடைக்கும். ஆகவே நிகர லாபம் ரூ. 44,400 (எக்டேருக்கு).

## 9. சீதாப்பழம் (Anona squamosa)

தென் அமெரிக்காவின் இயல் மரமான இது இந்தியாவை உள்ளிட்ட வெப்ப நாடுகளில் தோற்றுவிக்கப்பட்டு வெற்றியடைந்தது. ஹைதராபாத் நகரத்தைச் சுற்றியுள்ள காடுகளிலும், அஸ்ஸாம், உத்திரப்பிரதேசம் ஆகிய மாநிலங்களிலும் இது தன்னிச்சையாக வளர்ந்து காணப்படுகிறது. இச் செடியின் சத்துள்ள பழங்களுக்காக இதை வேறெங்கிலும் சுலபமாக வளர்க்க முடிந்தது. பசுமை நிறமுள்ள பழம் சீதாப்பழம் எனவும் செந்நிறவகைப்பழம் ' ராம்பல் ' எனவும் வழங்கப்பட்டது. ஒட்டு வகையிலும் மொக்குள்ள மரப்பட்டையை பிறிதொரு செடியில் ஒட்டு செய்து இதை வளர்க்கலாம்.

செப்டம்பர் - நவம்பர் மாதங்களில் பழங்கள் முதிர்கின்றன. விதை எடை கிலோவுக்கு 4500. விதைகள் முளைப்புவிகிதம் 35%. செடிகளாக உருவாகும் விகிதம் 25%. முளைப்பு விதைத்த 12 ஆம் நாள் முதல் 35 வது

நாள் வரை நடைபெறும். இதன் விதைகள் விதைப்பதற்கு முன் சுடு நீரில் இடப்பட்டு 24 மணி நேரம் ஊறவைக்கப்படுகின்றன. சில இடங்களில் இவைகள் நான்கு நாட்கள் வரையில் கூட குளிர்ந்த நீரில் ஊறவைக்கப்படுகின்றன. சில சமயங்களில் இதன் விதைகள் 7 ஆண்டுகள் வரை கூட முளைத்திறன் கெடாமல் இருக்கின்றன.

ஒட்டுக்கன்றுக்கான அடிச்செடிகள் கிடைப்பதற்கு புத்தம் புதிய விதைகளையே உபயோகிக்க வேண்டும். உயர் ரகப் பழம் கிடைக்கும். செடித்தண்டில் ஒரு மொக்குள்ள நீண்ட சதுரப்பட்டை பெயர்த்தெடுக்கப்படுகிறது. இது, அடிச் செடித் தண்டின் அதே அளவில் பட்டை பெயர்த்தெடுக்கப்பட்ட இடத்தில் பொறுத்தப்பட்டு 'செலபோன்' நாடாவால் நன்கு ஒட்டப்படுகிறது. இம்முறையால் உயர் ரக பழச்செடிகள் உருவாகின்றன.

நேரடியாகவே நட விதைகள் 4மீ. தூர இடைவெளிகளில் ஊன்றப்படுகின்றன. 3-4 ஆண்டுகளில் பழங்கள் கிடைக்கும். இந்தியாவில ஒரு செடிக்கு 100 - 150 பழங்கள் கிடைக்கும். 12-15 ஆண்டுகளில் மகசூல் குறைகிறது. இந்தியாவில் இதை தன்னிச்சையாகவே வளர விடுவதால் பாசனம், உரமிடுதல், கிளை கழிப்புகள் முதலிய காவாற்றுப் பணிகள் செய்தால், மகசூல் பெருகும், பழங்கள் மரங்களில் பழுப்பதில்லை. இவைகள் சேகரிக்கப்பட்டு, பானையில் வைக்கோலுடன் சேர்த்து வைத்தால், பழங்கள் கிடைக்கும். பழங்களில் ' சுக்ரோஸ் ' சக்கரைச் சத்தின் அளவு 16.5% குழந்தைகள் இம்மரப்பழங்களை விரும்பி உண்கின்றனர்.

தோட்டம் அமைக்கும் செலவு, ஒரு செடிக்கு தோராயமாக ரூ. 3 என்று எடுத்துக் கொண்டால், 5மீ x 5மீ. இடைவெளியில் ஒரு எக்டேர் தோட்டம் அமைக்க ரூ. 1,200 செலவாகும். இத்தொகை 15% கூட்டு வட்டி விகிதத்தில் 12 ஆண்டுகளில் ரூ. 6420 ஆக உயரும். இதன் பழங்கள் ஒரு எக்டேருக்கு ரூ. 3,000 வருமானம் தர வல்லவை (400 மரங்களின் மகசூல் மதிப்பு) 12 ஆண்டுகளில் கிடைக்கக் கூடும் வருமானம் ரூ. 36,000. ஆதலால் எதிர்ப்பார்க்கப்படும் நிகர இலாபம் ரூ. 29,580 (ரூ. 36,000 - ரூ. 6,420).

## 10. சவுக்கு (Casuarina equisetifolia)

விதைகள் பொடி அளவே உள்ளதால் (கிலோவுக்கு 7,60,000 விதைகள்) அவைகளை சம அளவு, மணலுடன் கலந்து தூவி விதைக்க வேண்டும். எறும்புத் தொல்லையைத் தவிர்க்க, 10% B.H.C. பொடி மறக்காமல் தூவப்பட வேண்டும். ஜூன் முதல் டிசம்பர் வரை விதைக் குடுவைகளைச் சேகரிக்கலாம். முளைப்பு மூன்றாம் நாள் முதல் இருபதாவது நாள் வரை நடைபெறும். முளை விகிதம் 20%. ஒரு கிலோ விதைகளிலிருந்து சுமார் 37,500 நாற்றுகள் கிடைக்கும். முறைதிறன் ஓர் ஆண்டு வரை இருக்கும். மண்ணால் மூடப்படாத வேருள்ள செடியை வெளி நடவு செய்ய உபயோகிக்கலாம். சவுக்குத் தோட்டத்திலிருந்து மண் எடுத்து வந்து, நாற்றாங்கால் பாத்தியில் கலந்தால் முளைப்புத் திறன் அதிகமாகும். வேரில் 'மைகொரைஸா' என்னும் நுண்ணுயிர் தொடர்பு ஏற்பட்டு தழைச்சத்து சேர்த்தல் இதனால் ஏதுவாகிறது.

பெருவாரியான மணல் பூமியில், உழுதல் அல்லது மாட்டுத் தொழு உரம் கலத்தல் செய்யப்படுகிறது. 4 மீ. தூர வரிசைகளில், வரிசையில் 2ம. தூரம் விட்டு செடிகளை வேளாண் காடு முறையில் சாகுபடி செய்யலாம். மரத்தடியிலேயே 8 ஆண்டுகள் வயதான தோட்டத்தில் ஒரு டன் விறகிற்கு ரூ. 400 விலை கிடைக்கும். வானம் பார்த்த பூமியிலும் ஒரு எக்டேருக்கு 25 டன் விறகு எதிர்பார்க்கலாம்.

முதலாண்டில் தோட்டம் அமைக்க செடிக்கு ரூ. 2.50 வீதம் ஒரு எக்டேர் தோட்டத்திற்கு ஆகும் செலவு ரூ. 3,125/-. 15% கூட்டு வட்டியுடன் இத்தொகை 10வது ஆண்டு அறுவடையின் போது ரூ. 12,500/- ஆக உயரும். அறுவடையின்போது ஒரு எக்டேரிலிருந்து மரத்தடியில், எதிர்பார்க்கப்படும் வருமானம் பின்வருமாறு :

| | |
|---|---|
| கழிக்கு ரூ. 20/- வீதம் 200 கழிகளிலிருந்து வருமானம் | ரூ. 4,000 |
| ஒரு டன் விறகிற்கு ரூ. 400/- வீதம் 25 டன் விறகிலிருந்து வருமானம் | ரூ. 10,000 |
| மொத்தம் | ரூ. 14,000 |

இவ்வாறு ஒரு எக்டேருக்கு நிகர இலாபம் - 1,500 (ரூ. 14,000 - 12,500) ஆகும்.

## 12. பூவரசு (Thespesia populnea)

விதை எடை கிலோவுக்கு 7,000 விதைகள் ஆகும். முளைப்பு விகிதம் 40% 10வது நாள் முதல் 40 வது நாள் வரை முளைப்பு நடைபெறும். முளைக்கும் திறன் ஒரு ஆண்டு காலம் வரை. சுமார் ஒரு மீ. நீளமுள்ள கிளை வெட்டுக்களை (பச்சையாகவும் கட்டை விரல் பருமனும் உள்ளவை) 40 - 60 செமீ ஆழத்தில் சிறிது சாய்வாக நட்டு நன்றாக வளரச் செய்யலாம். இது சிறிது மெதுவாகவே வளரும் தன்மையுடையது. இலைகள் வெள்ளாடுகளுக்கு தழைத்தீவனமாகக் கொடுக்கப்படுகின்றன. இது, ஒரு நல்ல கட்டிட வேலைக்கான மரமாதலால், 'நாட்டுத்தேக்கு' என்று அழைக்கப்படுகிறது.

வேளாண் காட்டுத்தோட்டத்தில் 5மீ x 5மீ. தூர இடைவெளியில் ஒரு எக்டேருக்கு (400 செடிகளுக்கு), செடிக்கு ரூ. 3 வீதம், தோட்டம் அமைக்கும் செலவு ரூ. 1,200. 15% கூட்டு வட்டி விகிதத்தில் இத்தொகை 30 ஆண்டுகளில் ரூ. 76,800 ஆகப் பெருகும். இத்தோட்டத்தில் ஒரு எக்டேரிலிருந்து 30 ஆண்டுகளில் எதிர்ப்பார்க்கும் வருமானம் பின்வருமாறு :

| | |
|---|---|
| ஒரு கன அடி மரம் ரூ. 200 வீதம் 600 கன அடி மரத்தின் விலை (மரத்தடியில்) | ரூ. 1,20,000 |
| ஒரு டன் விறகின் விலை, டன்னுக்கு ரூ. 300 வீதம் 4 டன் விறகின் விலை | ரூ. 1,200 |
| மொத்தம் | ரூ. 1,21,200 |

இவ்வாறு ஒரு எக்டேருக்கு நிகர இலாபம் ரூ. 44,400 (ரூ. 1,21,200 - 76,800) ஆகும்.

## 13. பெருமரம் (Ailanthus excelsa)

ஈர மற்றும் உலர் வெப்ப மண்டலங்களில் காணப்படும் இம்மரம் வேகமாக வளரக்கூடியது. மற்றும் இது தீப்பெட்டித்தொழிலில் தீக்குச்சிக்காகவும், பிளைவுட் தொழிலில் மலிவான பிளைவுட் பலகைக்கு உள் மரத்திற்காகவும் அதிக அளவில் தேவைப்படுகிறது.

விதைகள் மே - ஜூன் மாதங்களில் முதிர்ச்சியடைகின்றன. முளை விகிதம் - 30%. செடி வரும் விகிதம் - 20% விதைத்த 10 ஆம் நாள் முதல் 30 வது நாள் வரை முளைப்பு நடைபெறுகிறது. சிறகுள்ள இதன் விதைகள் காற்றில் பறந்து போகுமாதலால் காற்றடிக்கும் காலத்திற்கு முன்பே இவைகள் சேகரிக்கப்பட வேண்டும்.

ஒழுங்காக ஆனால் கொஞ்சமாக நீர் ஊற்றி வந்து நாற்றுகள் வெகு வேகமாக வளர்வதைக் கட்டுப்படுத்த வேண்டும். இதற்கு களைகளும் காற்றும்தான் பெரும் விரோதிகள். இளஞ்செடிகளின் இலைகளை ஒரு வித கம்பளிபூச்சி தாக்குகிறது. இப்பூச்சியைக் கையில் அகற்றி எடுத்துக் கொதி நீரில் இட்டு அழித்தல் வேண்டும்.

நான்கு ஆண்டுகளில் இச்செடி 4.20 மீ. நீளமும் 30 செ.மீ. சுற்றளவும் அடைகிறது.

வேளாண்காடு அமைப்பதற்கு 5மீ x 5மீ. இடைவெளிகளில் செடிகளை நடுதல் வேண்டும்.

தோட்டம் உண்டாக்க, முதலாண்டில் ஒரு செடிக்கு ரூ. 3% வீதம் (நாற்றாங்கால் செலவு உள்பட) ஒரு எக்டேரில் செடிகள் வைக்க ரூ. 1,200 செலவாகும். 15% விகித கூட்டு வட்டியில், இத்தொகை பத்து ஆண்டுகளில் ரூ. 5,000 ஆகப் பெருகும்.

10வது ஆண்டில் அறுவடை செய்து, ஒரு எக்டேருக்கு 600 கன அடி மரம் பெற்று மரத்தடியில் ஒரு கன அடி மரத்திற்கு ரூ 100 வீதம் ரூ.60,000 வருமானம் அடையலாம். ஆகவே 10 ஆண்டுகளின் முடிவில் ஒரு எக்டேருக்கு ரூ. 55, 000/- (ரூ. 60,000 - ரூ. 5,000) ஆதாயம் பெறலாம்.

## 14. புளி (Tamarindus indica)

மார்ச் முதல் ஏப்ரல் வரை பழங்கள் முதிர்ச்சி அடைகின்றன. விதை எடை கிலோவுக்கு 1800 விதைகள் ஆகும். முளை விகிதம் 66% விதைகள் விதைக்கப்படும் முன்பு சுடுநீரில் ஊற வைத்து நேர்த்தி செய்யப்பட வேண்டும். நாற்றுப் பண்ணைகளில் இரண்டு ஆண்டுகளில் சுமார் 1 மீட்டர் உயரம் வரை வளர்த்த கன்றுகளே நடப்பட வேண்டும். வளமற்ற மண் பூமியும் இச்செடிகள் நட ஏற்றதாகும். செடிகளைச் சுற்றி வேலி அடித்து ஆடுகள் மேயாமல் இச்செடிகளைப் பார்த்துக் கொள்வது அவசியம்.

வேளாண்காடு பயிராக இம்மரச் செடிகளை வளர்க்க 8 மீ. தூர வரிசைகளில், வரிசையில் 8 மீ. இடைவெளிகளில் இவை நடப்படுகின்றன. மண் தொட்டி செடியின் விலை ரூ. 5/- ஆகும். 45 செ.மீ x 45 செ.மீ x 45 செ.மீ அளவு குழிகள் தோண்டப்பட்டு செடிகள் நடப்படுகின்றன. முதலாண்டு, ஒரு செடிக்கு ரூ 10 வீதம் ஒரு எக்டேர் தோட்டம் அமைக்க ஆகும் செலவு ரூ. 1,500 ஆகும். 15% கூட்டு வட்டி விகிதத்தில் இத்தொகை அறுவடையாகும் 30வது ஆண்டில் ரூ. 96,000 ஆக உயரும்.

30வது ஆண்டின்போது அறுவடையிலிருந்து கிடைக்கக்கூடும் வருமானம் பின்வருமாறு :

| | | | ஒரு எக்டேருக்கான (100 மரங்களுக்கான பழ மகசூல்) |
|---|---|---|---|
| 8வது ஆண்டு | முதல் 10வது வரை | ஒரு மரத்திற்கு 9 கிலோ பழங்கள்வீதம் | 900 கிலோ |
| 11வது ஆண்டு | முதல் 15 வது வரை | ஒருமரத்திற்கு 25 கிலோ பழங்கள் வீதம் | 2500 கிலோ |
| 16வது ஆண்டு | முதல் 30வது வரை | ஒரு மரத்திற்கு 120 கிலோ பழங்கள் வீதம் | 12,000 கிலோ |
| | | மொத்தம் | 15,400 கிலோ |

| | |
|---|---|
| மரத்தடியில் ஒரு கிலோ புளியம் பழத்திற்கு ரூ.3/- வீதம் 15,400 கிலோ பழங்களின் விற்பனை வருமானம் | ரூ.46,200 |
| மரத்தடியில் ஒரு கனஅடி மரத்தின் விலை ரூ. 200/- வீதம் 375 கன அடி மரத்தின் விற்பனை வருமானம் | ரூ. 75,000 |
| மரத்தடியில் ஒரு டன் விறகின் விலை ரூ. 300 வீதம் 4 டன் விறகின் விற்பனை வருமானம் | ரூ. 1,200 |
| மொத்தம் | ரூ. 1,22,400 |

நிகர இலாபம் ரூ. 26,400 (ரூ. 1,22,400 - 96,000) ஆகும்.

15. நாவல் (Syzygium cumini)

இது பசும் மற்றும் அரைப்பசும் காடுகள், இலையுதிர் காடுகள் மற்றும் உப வெப்ப பூமிகளில் காணப்படும். ஈரமிருக்கும் சமவெளிப்பகுதி இதை வளர்க்க மிகவும் ஏற்றது.

ஜூன் மாதம் பழங்கள் காணப்படுகின்றன. விதை எடை கிலோவுக்கு சுமார் 3,000. முளைவிகிதம் 20% விதைத்த 7 ஆம் நாள் முதல் 30வது நாள் வரை முளைப்பு நடைபெறும். முளைக்கும் சக்தி மூன்று ஆண்டுகள் வரை இருக்கும். விதைக்கும் முன் விதை நேர்த்தி யாதும் தேவையில்லை. மரத்திலிருந்து விழும் புதிய பழங்களை சேகரித்து நிழலில் குவியலாக உலர்த்தி பழத் தோல்களை மக்கச் செய்ய வேண்டும். நீரில் கழுவி விதைகளாக பிரித்தெடுக்க வேண்டும். விதைகள் நிழலில் உலர்த்தப்பட வேண்டும். சேகரித்த பின் எவ்வளவு சீக்கிரம் விதைகளை விதைக்க இயலுமோ அவ்வாறு செய்ய வேண்டும். 10 ஆண்டுகளில் மரம் 60 செ.மீ சுற்றளவு அடைகிறது.

நேரடியாக நிலத்தில் விதைத்தோ, பாலிபை செடிகள் அல்லது மண் பந்துடன் கூடிய வேருள்ள செடிகளை நட்டோ மரத்தை வளர்க்க வேண்டும்.

பழங்கள் உண்ணத் தகுந்தவை. மரத்தின் பாகங்கள் மருத்துவத்திற்கு உபயோகமாகின்றன. மரத்திலிருந்து " ப்ளைவுட்" செய்யலாம். மரக் கருவிகள் மரத்திலிருந்து செய்யலாம். தீப்பெட்டித் தொழில் இது உபயோகமாகிறது.

வேளாண் காடுகளில் இது 8மீX8மீ இடைவெளியில் நடப்படுகிறது. (எக்டருக்கு சுமார் 150 செடிகள்). தோட்டம் அமைக்கும் செலவு முதலாண்டு எக்டருக்கு ரூ.444. இத்தொகை 15% கூட்டு வட்டியில் 30 ஆண்டுகளில் ரூ. 29,304 ஆகப் பெருகும். 30வது ஆண்டு அறுவடையில் 150 கன அடி மரம் (மதிப்பு ரூ. 30,000), உடன் விறகு (மதிப்பு ரூ.600) அப்பப்போதைய பழங்கள் உடன் வரையிலும்(மதிப்பு ரூ. 2000) மற்றும் விவசாயச் சாகுபடி வருமானம் ரூ. 2,400 ம் கிடைக்கும். ஒட்டு மொத்த வருமானமாக ரூ. 35,000 (ரூ. 30,000 ஒ ரூ. 600 + 2000 + 2,4000) ஆகவும் மொத்தச் செலவு மதிப்பு ரூ. 29,304 ஆகவும் இருக்கும். ஆகையால் எக்டேருக்கு நிகர லாபம் ரூ. 5,696 (ரூ. 35000 - ரூ. 29,304).

16. சுபாபுல் (Leucaena leucocephala)

இது நடுத்தர உயரமுள்ள ஒரு மரம். ஆண்டு மழையளவு 500 மி.மீ.முதல் 2,000 மி.மீ. உள்ள இடங்களில் மண் ஆழமாகவும், நீர் வடியும் தன்மையுள்ளதாகவும், கார - அமிலத்தன்மை சார்பற்றதாகவும் இருந்தால் நன்கு வளர்கிறது. ஆயினும் இது களர் மற்றும் உவர் மண்ணையும் பொறுத்துப்போகிறது. இதை அதிகச்சரிவுள்ள மலைச்சாரலிலும், குன்று நிலங்களிலும் மற்றும் கற்பாங்கான இடங்களிலும் கூட வளர்க்கலாம். வறட்சியைத் தாங்கவல்லதாகையால், மானாவாரி நிலங்களிலும், தரிசு நில மீட்சிக்கும் இதை வளர்க்கலாம்.

பிப்ரவரி - மே மற்றும் ஜூலை - நவம்பர் மாதங்களில் விதைகள் கிடைக்கும். விதை எடை - கிலோவுக்கு 25,000 - 30,000. முளைப்பு விகிதம் - 50% முதல் 60% வரை.

ஒரு பாத்திரத்தில் நீரை அடுப்பில் வைத்து 80° செ. சூடு நிலைக்குக் கொண்டு வந்தவுடன், இப்பாத்திரத்தைக் கீழேயிறக்கி சுபாபுல்விதைகளை இதிலிட்டு சுமார் 24 மணிநேரம் வைக்கவேண்டும். விதைகளுடன் ' ரைசோபியம் ' நுண்ணியிர் கலவை கலக்கப்பட்டு பின்பு வளமான மண்நிரப்பிய பாலிதீன் பைகளில் இவ்விதைகள் விதைக்கப்படவேண்டும். ( ஒரு பாலிபைக்கு 2-3 விதைகள் விதைக்கலாம்). இப்பாலிபை செடிகளை மூன்று மாதங்கள் நீருற்றிக் களையெடுத்துப் பராமரித்தால் அவை வெளிநடவுக்குத் தயாராகிவிடும் நன்றாக நீர் பாய்ச்சும் வசதியிருந்தால் வெளிநிலத்தில் நேரடியாகவே விதைகளை விதைத்து நல்ல பலனை எதிர்பார்க்கலாம்.

சுபாபுல் தீவனமாகவும், விறகாகவும், மரமாகவும் உபயோகமாகிறது. அது அதிக ஊட்டச்சத்துள்ள ஈரமுள்ள இலைகள் உடையதாகையால், கோடையில் தீவனம் அளிக்க வல்லது.

நட்ட 125 - 150 நாட்களில் சுபாபுல் பூவிட ஆரம்பமாகிறது. தீவனம் வேண்டின், பூக்கும் முன்பாக இலைகளை அறுவடை செய்யவேண்டும். செடி 1.5 மீ முதல் 1.75 மீ உயரம் அடைந்தபின், தரைமட்டத்திலிருந்து 80-90 செ.மீ உயரத்தில்செடியை முதன் முறையாக வெட்ட வேண்டும். பிற்பட்ட வெட்டுகள் 45 நாட்களுக்கு ஒருமுறை செய்யலாம். மேய்ச்சல் நிலங்களில் கால்நடைகளுக்கு நிழல் கொடுக்கவும் பசுந்தீவனம் கிடைக்குமாறு இதைப்பயிர் செய்யலாம். இதை விறகாகவும் மரமாகவும் உபயோகிக்கலாம். கோந்து சேரிக்கலாம் இதன் கழிகளை சாவரக் காம்புகளாக உபயோகப்படுத்தலாம். வெட்டு மோட்டுகளிலிருந்து மறு கிளைப்பு உண்டாகி செலவின்று புதுமரம் உண்டாகும்.

17. பனை (Borassus flabellifer)

இது ஆப்பிரிக்காவின் வெப்பப் பகுதிகளில் இயற்கையாக வளர்கிறது. இந்தியா, பர்மா, ஸ்ரீலங்கா ஆகிய இடங்களில் இது மிகப் பல ஆண்டுகளுக்கு முன்பு கொண்டு வரப்பட்டது. தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம், ஒரிசா மற்றும் மேற்கு வங்காளம் ஆகிய மாநிலங்களின் கடலோர மாவட்டங்களில் இம்மரங்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இந்தியாவில் எட்டு கோடி மரங்களுக்கும் மேலாகவும் தமிழ்நாட்டில் சுமார் ஐந்து கோடி மரங்களும் இருப்பதாகத் தெரியவருகிறது.

இது சுமார் 30மீ. உயரம் வரையிலும், 1மீ முதல் 2மீ. சுற்றளவு வரையிலும் வளரக் கூடியது. 12மீ. முதல் 18 மீ. வரை உயரமுள்ள மரங்களை நாம் சாதாரணமாகக் காணலாம். ஒரு மரத்தில் சுமார் 30-40 இலைகள் இருக்கும். இது கிளைகளில்லாமல் செங்குத்தாக வளர்கிறது. இது வளர அதிக சூரிய வெளிச்சம் தேவைப்படும். இது கருப்பான சொர சொரப்பான பட்டை உடையது. பட்டைகள் பிளவுபட்டும் முட்கள் உள்ளதாகவும் இருக்கும். இயற்கையாய் ஆண் மரங்களும் பெண் மரங்களும் கூட்டங்களாக வளரும். இது வறட்சியைத் தாங்க வல்லது.

இது ஆண்டு மழை 300 மி.மீக்கும் குறைவான இடங்களிலும் வளர்கிறது. உப்பு மண் வகைகளை (களர், உவர்) இது பொறுத்தும் போகிறது. கற்களடர்ந்த மண்ணிலும் இது வளர வல்லது. கடலோரத்தில் இதை சாதாரணமாக காணலாம். உப்புக் கலந்த கடற் காற்றினால் இது பாதிக்கப்படுவதில்லை.

கடற்கரையில் பதாம், கொடுக்கபப்புள்ளி ஆகிய மரங்களுடன் கூட இதை வளர்க்கலாம். மானாவாரி நிலங்களில் இதை இலாபகரமாகப் பயிர் செய்யலாம்.

அதிக பதநீர் தரக்கூடிய மற்றும் அதிக காய்ப்புள்ள உள்ளூர் மரங்களிலிருந்து விதைகள் (கொட்டைகள்) சேகரிக்கப்படவேண்டும். 30-40 வயதுள்ள மரங்கள் இதற்கு மிகவும் ஏ ற்றவை. உயரம் குறைவான மரங்களிலிருந்து பறித்துக் கிடைத்த பனங்கொட்டைகளை விதைப்பது தான் சாதாரணமாக செடி வளர்க்கும் முறையாகும். ஸ்ரீ வில்லிபுத்தூர் பனை ஆராய்ச்சி நிலையத்திலும், நாற்றுப் பண்ணையிலிருந்து பெறப்பட்ட செடிகளை நடும் முறை உறுதியாக்கப்பட்டிருக்கிறது.

செப்டம்பர் மாதம் முதல் மரத்திலிருந்து பழுத்த பழங்கள் கீழே விழ ஆரம்பிக்கின்றன. சுமார் 30 வயதுள்ள மரங்களிலிருந்து சேகரிக்கப்பட்ட இப்பழங்கள் ஒரு கூரான கத்தியால் நாரை நீக்காமல் திறக்கப்பட்டு, கொட்டைகள் பிரிக்கப்படுகின்றன.

நாற்றுப் பண்ணை பழங்களிலிருந்து பிரிக்கப்பட்ட நல்ல கொட்டைகள் யாவும், மழைத்தொடக்கத்தில் விதைக்கப்படுவதற்கு முன்பு நிழலில் வைக்கப்படுகின்றன. கொட்டைகள், குறிக்கப்பட்ட இடங்களில் அதாவது 2மீ. இடைவெளிகளில் என்று கொள்ளலாம். கிழங்கு நேராக களத்தில் விதைக்கப்படலாம். முளைப்பு 22 நாட்களில் உண்டாகிறது. உண்ணத்தக்க நாருடன் கூடிய வேர்கள் வேண்டுமாயின், கொட்டைகள் தனிப் பாத்திகளில் விதைக்கப்பட வேண்டும்.

நடவு : கொட்டைகள் 500செ.மீ. ஆழக் குழிகளில் நிலத்தில் நேரடியாகவே 2மீ. இடைவெளிகளில் விதைக்கப்படுகின்றன. ஒவ்வொரு குழியிலும் 2 கொட்டைகள் விதைப்பது வழக்கமாயிருந்து வருகிறது. கொட்டைகள் 5 செ.மீ ஆழத்தில் விதைக்கப்பட வேண்டும். கொட்டையின் கண் உள்ள பகுதி கீழ்நோக்கியிருக்குமாறு விதைக்கப்பட வேண்டும். குழிகளில் உள்ள மண்ணுடன் மாட்டுத் தொழுவ உரம் சேர்க்கப்பட வேண்டும். முளைத்து வரும் விதை இலைகள் கரையானல தாக்கபடாமலிருக்க, ஒரு குழிக்கு 150 கிராம் பி.ஹெச்.சி 10% இராசாயனப் பொடியை தூவ வேண்டும். முதல் மாதத்தில் தினமும் நீர் ஊற்ற வேண்டும். இரண்டாம் மாதம் வாரத்திற்கு இரு முறை நீர் ஊற்றினால்போதும். ஒருகொட்டையே உள்ள பழம்பெண் மரத்தையே உண்டாக்கும். முளை விகிதம் நல்லசெடி விகிதத்தைத் தருமாறு உயர்ந்தே இருக்கும். இம்மரம் 100 ஆண்டுகள் உயிருடன் இருக்கும்.

1000 செடிகளுக்கான உற்பத்திச் செலவு ரூ. 900 அல்லது ரூ. 1000 ஆகக் கொள்ளலாம்.

2மீ X 2மீ இடைவெளியில் நட்டால் ஒரு எக்டருக்கான செலவு ரூ.2,500.

6வேது ஆண்டு முதல் பனை இலைகளிலிருந்தும் நாரிலிருந்தும் கிடைக்கும் வருமானம், மரத்திற்கு ரூ. 0. 50 வீதம்.

ஒரு எக்டருக்கு ரூ. 1,250

14 ஆம் ஆண்டி லிருந்து பதனீர் மூலம், ஒரு மாதத்திற்கு ரூ 5 வீதம் ஒரு எக்டேரிலிருந்து வரவு ரூ. 2,500 x 5 = 12,500

இலைகள் மற்றும் நார் மூலம் மரத்திற்கு ரூ 1 வீதம் ஒரு எக்டேரிலுள்ள 2,500 மரங்களிலிருந்து வரவு = ரூ. 2,500.

**முடிவுரை :**

இதில் கொடுக்கப்பட்ட விபரங்கள் யாவும் கோடிட்டுக்காட்டும் வகையில் தரப்பட்டுள்ளனவே தவிர நிறைவுத் தன்மையை கருத்தில் கொண்டவை அல்ல. மேலும் வேண்டிய விவரங்களுக்கு, உங்கள் பகுதியை சார்ந்த வேளாண்மைத்துறை அலுவலர்களை அணுகி பயன் பெறவும்.

